# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 6 | இதழ் 3 | மே 10, 2019 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 6 | Issue 3 | May 10th, 2019 | Annual Subscription Rs. 100/-




சோம்பல் நீங்கி சுறுசுறுப்பாக செயல்படுவது எவ்வாறு?





சுறுசுறுப்பாக இருந்தாலும் சரி, சோம்பல் வெளிப்பட்டாலும் சரி, அது இயற்கையானது என புரிந்து கொள்வது தான் உண்மையை புரிந்து கொள்வதாகும். மானம் இயற்கையாக செயல்படும் போது அது இயற்கையாகவே தன்னை சீரமைத்துக் கொள்ளும்.

– ஸ்ரீ பகவத்

பகவத் பாதை

தமிழ் மாத இதழ்

# ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம்கள்

| நாள் | விபரம் | செலவு பகிர்வு |
|---|---|---|
| **1.6.2019** காலை 11.00 மணிமுதல் **4.6.2019** மதியம் 3.00 மணிவரை | **4 நாள் ஞான முகாம்** இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம். | ரூ. **3000/-** மட்டும். |
| **15.6.2019** காலை 11.00 மணிமுதல் **16.6.2019** மதியம் 3.00 மணிவரை | **ஞான உறுதி முகாம்** (ஏற்கெனவே ஞானமுகாமில் கலந்து கொண்டவர்களுக்கு மட்டும்) இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம். | ரூ. **1000/-** மட்டும். |
| **6.7.2019** காலை 11.00 மணிமுதல் **7.7.2019** மதியம் 3.00 மணிவரை | **மாணவர்களுக்கான வாழ்வியல் முகாம்** (10, 11, 12 ஆம் வகுப்பு மற்றும் கல்லூரி மாணவர்களுக்கு மட்டும்) இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம். | அனுமதி இலவசம். நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன. |
| **11.7.2019** காலை 11.00 மணிமுதல் **14.7.2019** மதியம் 3.00 மணிவரை | **4 நாள் ஞான முகாம்** இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம். | ரூ. **3000/-** மட்டும். |
| **3.8.2019** காலை 11.00 மணிமுதல் **4.8.2019** மதியம் 3.00 மணிவரை | **ஞான உறுதி முகாம்** (ஏற்கெனவே ஞான உறுதி முகாமில் கலந்து கொண்டவர்களுக்கு மட்டும்) இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம். | ரூ. **1000/-** மட்டும். |
| **15.8.2019** காலை 11.00 மணிமுதல் **18.8.2019** மதியம் 3.00 மணிவரை | **4 நாள் ஞான முகாம்** இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம். | ரூ. **3000/-** மட்டும். |

முன்பதிவிற்கு

**ஸ்ரீ பகவத் மிஷன்,** 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம்-3.

**79041 18421, 99942 05880, 97891 65555**

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN
99942 05880
Dr. N. KAILASAM
94432 90559
K.S. JEEVAMANI
97891 65555

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3. Cell : 90926 46260, 98651 34075



# சோம்பல் நீங்கி சுறுசுறுப்பாக செயல்படுவது எவ்வாறு?



- ஸ்ரீ பகவத்

தொடர்ந்து சில நாட்கள் மனதும், உடலும் சுறுசுறுப்பாக உள்ளது. பிறகு சில நாட்கள் சோம்பல் ஏற்பட்டு எந்த வேலையும் செய்ய முடியாமல் போய் விடுகிறது. இதற்குக் காரணம் என்ன?

- இப்படி ஒரு கேள்வியை அன்பர் ஒருவர் கேட்டுள்ளார்.

இது அவருக்கு மட்டுமே சொந்தமான கேள்வியாகத் தெரியவில்லை. பலரும் இத்தகைய மனநிலையைச் சந்தித்து வருவதால் இதனை ஒரு பொதுக் கேள்வியாக எடுத்து நாம் இந்த ஆய்வை மேற்கொள்ளப் போகிறோம்.

இந்தக் கேள்வியின் பொருள் என்ன?

நம்முடைய மனது பாதி நாட்கள் நாம் விரும்பியபடி செயல்படுகிறது. மீதி நாட்கள் அது அப்படிச் செயல்படாமல் அதன் விருப்பப்படி எப்படியெல்லாமோ செயல்படுகிறது.

ஒரு ஜென் மடாலயத்தில் புதிதாக இரண்டு சீடர்கள் சேர்ந்திருந்தார்கள். அந்த மடாலயத்தின் குருவைப் பற்றி சிலர் சிறப்பாகக் கூறியிருந்ததால் அந்தச் சீடர்கள் புதிதாகச் சேர்ந்திருந்தார்கள்.

ஒரு நாள் அந்த குருவுடன் புதிய சீடர்கள் ஆற்றோரமாக நடந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

ஆற்றங்கரையிலுள்ள மரத்தில் தனது மாடு ஒன்றைக் கட்டி வைத்துவிட்டு விவசாயி ஒருவர் ஆற்றில் குளித்துக் கொண்டிருந்தார்.

அதைப் பார்த்த குருநாதர், அந்த புதிய சீடர்களைப் பார்த்து, "அந்த மாடு அந்த விவசாயியைக் கட்டிவைத்துக் குளிப்பாட்டிக் கொண்டிருக்கிறது," என்று கூறினார்.

உண்மையில் மாடுதான் கட்டி வைக்கப்பட்டிருந்தது. விவசாயி சுதந்திரமாகத்தான் குளித்துக் கொண்டிருந்தார்.

'மாட்டைக் கட்டி வைத்துவிட்டு விவசாயி குளித்துக் கொண்டிருக்கிறார்' என்று சொல்ல நினைத்ததை மாற்றிச் சொல்லி விட்டதாக எடுத்துக் கொண்டு ஒரு சீடன் அமைதியாகி விட்டான்.

அடுத்த சீடன் மட்டும், "மனிதர் எவரும் கட்டப்படவில்லை சுவாமி. அவர் சுதந்திரமாகத்தான் குளித்துக் கொண்டிருக்கிறார். மாடுதான் கட்டி வைக்கப்பட்டுள்ளது. தாங்கள் கூறுவது புரியவில்லையே சுவாமி" என்று கேட்டான்.

"யார் யாரைக் கட்டி வைத்துள்ளார்கள் என்பது இப்போது புரிந்துவிடும்," என்று கூறிய குரு, மாட்டின் அருகில் சென்று அது கட்டி வைக்கப்பட்டிருந்த கயிற்றை அவிழ்த்து விட்டார்.

அவிழ்த்து விடப்பட்டதும் மாடு அங்கிருந்து ஓட ஆரம்பித்தது. அதைக் கண்ட விவசாயி மாட்டைத் துரத்திக் கொண்டு ஓட ஆரம்பித்தார்.

குரு இப்போது கேட்டார் ; "யார் யாரை இழுத்துக் கொண்டு போகிறார்கள்?"

இப்போது நமது கேள்வி என்ன?

நம்முடைய மனது நமது கட்டுப்பாட்டில் உள்ளதா?

அல்லது நாம் நமது மனதின் கட்டுப்பாட்டில் உள்ளோமா?

முதலில் நாம் சந்தித்த கேள்வியை மீண்டும் ஒருமுறை பார்ப்போம்.

'மனதும் உடலும் சில நாட்கள் சுறுசுறுப்பாக உள்ளது. சில நாட்கள் சோம்பல் ஏற்பட்டு விடுகிறது.'

இதில் நம்முடைய பங்கு ஏதாவது உள்ளதா?

சுறுசுறுப்புக்கும் நாம் காரணமல்ல. சோம்பலுக்கும் நாம் காரணமல்ல.

அவை அவை போக்கில் வருகின்றன.

அது தோன்றுவதற்கும், மறைவதற்கும் நாம் காரணமல்ல.

மனதின் இயக்கம் சுதந்திரமானது. அது சுதந்திரமாக இயங்கிக் கொண்டிருக்கிறது.

இப்போது நாம் என்ன செய்யவேண்டும்?

அதனுடைய சுதந்திரத்தில் நாம் குறுக்கிட வேண்டுமா?

நாம் விரும்பியவாறு அதனை செயல்படச் செய்ய வேண்டுமா?

இந்த சந்தர்ப்பத்தில் நம்மை நோக்கி இன்னும் ஒரு கேள்வி.

நமது மனம் சுதந்திரமாகச் செயல்படுவது சரியானதா?

அல்லது நமது விருப்பத்திற்கேற்றவாறு கட்டுப்பாட்டுடன் செயல்படுவது சரியானதா?

சில சமயங்களில் நமது மனம் சுறுசுறுப்புடன் செயல்படுகிறது. அது நமக்குப் பிடித்திருக்கிறது.

சில சமயங்களில் நமக்குச் சோம்பல் ஏற்பட்டுவிடுகிறது. அது நமக்குப் பிடித்திருக்கவில்லை.

முதலாவது செயல்பாட்டைப் பொறுத்த அளவில் நாம் உடன்பாடாகச் செயல்படுகிறோம்.

இரண்டாவது செயல்பாட்டைப் பொறுத்த அளவில் நாம் முரண்பாடாக செயல்படுகிறோம்.

இங்கு இரண்டு விதமான செயல்பாடுகள் உள்ளன. அவை எவை?

மனதினுடைய செயல்பாடு முதலாவதாகவும்

அதனை எதிர்கொள்ளும் நமது செயல்பாடு இரண்டாவதாகவும்

முதலாவதாக உள்ள மனதின் செயல்பாட்டில் மாற்றம் தேவையா

அல்லது அதனை எதிர்கொள்ளும் இரண்டாவதான நமது செயல்பாட்டில் மாற்றம் தேவையா?

முதலாவதான மனதின் செயல்பாட்டைப் பொறுத்த அளவில் அது எப்படி செயல்படவேண்டும்? எப்படி செயல்படக்கூடாது?

மனதினுடைய முதலாவது செயல்பாட்டைப் பொறுத்த அளவில் அது சுதந்திரமாக செயல்பட வேண்டும். அது தான் அதனுடைய சரியான செயல்பாடு.

அதனுடைய தவறான செயல்பாடுகள் என்ன? அதனை கட்டுப்படுத்திச் செயல்பட வைப்பது தான் அதனுடைய தவறான செயல்பாடு.

அது சுதந்திரமாக இருந்து சுறுசுறுப்பாகவும் செயல்படலாம்.

மனிதனின் சுதந்திரமே வாழ்வின் சுதந்திரம். மன இயக்கத்தின் சுதந்திரத்தில் குறுக்கிட எவருக்கும் உரிமை கிடையாது.

'சில நேரங்களில் அது சோம்பலாக இருந்து நம்மை முடக்கிப் போட்டு விடுகிறதே' என்ற ஆதங்கம் எதைக் காட்டுகிறது?

எதையாவது செய்து மனதின் சுதந்திரத்தைப் பறித்து அதைக் கட்டிப் போட்டு விட வேண்டும் என்னும் விருப்பத்தையே இது காட்டுகிறது.

நம் மனம் சுறுசுறுப்புடன் இயங்குவது தான் சரி என்றும், சோம்பலுடன் இயங்குவது சரியல்ல என்றும் நாம் ஒரு கருத்தை நம்முடன் வைத்துள்ளோம்.

அதனால் நம்மை யறியாமலேயே நாம் சுறுசுறுப்பை ஏற்றுக் கொள்கிறோம். சோம்பலை எதிர்க்கத் துவங்குகிறோம்.

ஒருவர் தனது பிரச்சினையைக் கண்டோ அல்லது நோயைக் கண்டோ பயமடைந்துள்ளார் என வைத்துக் கொள்வோம். நாம் அவருக்கு எவ்வாறு ஆறுதல் கூறுவோம்?

'பயப்படாதே! தைரியமாக இரு!' என்று தான் அவருக்கு அறிவுரை கூறுவோம்.

இதுதான் ஒரு சராசரியான அணுகுமுறை. இதனால்தான் வருத்தப்படாதே, பயப்படாதே பொறாமை கொள்ளாதே என்று பலரும் உபதேசிக்கின்றனர்.

அது தவறான உபதேசம் என நமக்கும் தோன்றவில்லை. சரியானதொரு உபதேசமாகத்தான் நமக்குத் தோன்றுகிறது.

ஆனால் இந்த அணுகுமுறை அனைத்தும் இயற்கைக்கு விரோதமானவை; நமக்கு நாமே போராடத் தூண்டுபவை; மனப் போராட்டங்களுக்குக் காரணமானவை.

யோக சாதனைகள் அனைத்தும் மனதைக் கட்டிப்போடுவதற்காக வடிவமைக்கப்பட்டவை. யோக சாதனைகள் மூலம் மனதைக் கட்டுப்படுத்தி வைக்கலாம். நாம் விரும்பக் கூடிய சில நல்ல உணர்வுகளைக் கூட ஏற்படுத்தி காட்டலாம்.

ஆனால் அவை யாவும் தற்காலிகமான ஒரு பலனையே கொடுக்கும். ஆரம்பகால ஆன்ம சாதகர்கள் யோக சாதனைகள் சிலவற்றைப் பழகிப் பார்ப்பதில் எந்தத் தவறும் கிடையாது.

அடிப்படையில் யோக மார்க்கங்கள் அனைத்தும் பந்தங்களை ஏற்படுத்தும் மார்க்கங்களே. விடுதலையைக் கொடுக்கும் மார்க்கங்களல்ல.

கட்டுப்பாடுகள் அனைத்தும் பந்தங்களைத்தான் ஏற்படுத்தும்; விடுதலையைக் கொடுக்காது.

சுதந்திரம் மட்டுமே விடுதலையைக் கொடுக்கும். விடுதலை மட்டுமே மலர்ச்சியையும் மாற்றத்தையும் கொடுக்கும்.

இப்போது நாம் செய்ய வேண்டுவது என்ன?

நமது மன இயக்கத்தை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்வது மட்டுமே நாம் செய்ய வேண்டுவதாகும்.

அவ்வாறு நாம் செயல்பட்டுக் கொண்டிருக்கிறோமா?

நாம் சுறுசுறுப்பாக இருக்கும்போது நம் மனோ இயக்கத்தை முழுமனதுடன் ஏற்றுக் கொள்கிறோம்.

நம்மை நாமே முழுமனதுடன் ஏற்றுக்கொள்கிறோம்.

சோம்பல் ஏற்படும் போது நாம் நம்மை ஏற்றுக் கொண்டுள்ளோமா?

அப்போது நாம் நம்மை முழுமனதுடன் ஏற்றுக் கொள்வதில்லை.

வரக்கூடாத ஒன்று வந்துள்ளதாகவும், ஏற்படக்கூடாத ஒன்று ஏற்பட்டு விட்டதாகவும் நாம் எடுத்துக் கொள்கிறோம்.

இப்போது –

நமது மன இயக்கத்தில் நமக்கு ஒரு மாற்றம் தேவைப்பட்டுவிடுகிறது.

விளைவு?

மனப்போராட்டமாகவே இது மாறிவிடுகிறது.

நமக்கு ஏற்படும் மனப் போராட்டம், நமது செயலையும் பாதித்துவிடுகிறது.

இப்போது நாம் என்ன செய்ய வேண்டும்?

நம்முடைய மன இயக்கம் சம்பந்தமாக நாம் எதுவுமே செய்யத் தேவையில்லை என்னும் நமது கருத்தை நாம் அனைவருமே புரிந்து கொண்டுதான் இருக்கிறோம்.

அப்படிப் புரிந்து கொண்டதால் நம்முடைய மனதின் செயல்பாட்டில் ஏற்பட்ட மலர்ச்சியையும் நாம் புரிந்து கொண்டுதான் இருக்கிறோம்.

நம்முடைய மன இயக்கத்தில் ஏற்பட்ட மாற்றத்தை நாம் நிதர்சனமாகவும், அனுபவ பூர்வமாகவும் நாம் புரிந்து

கொண்டிருந்தபோதிலும்,

இப்படியொரு பிரச்சினை நமக்கு எப்படி ஏற்பட்டது?

மனதை எதிர்த்துப் போராடத் தேவையில்லை என்று தெரிந்திருந்த போதிலும் எப்படி நாம் அதனை மறந்துவிட்டுப் போராடி விடுகிறோம்?

நாம் எந்த ஒரு செயலில் ஈடுபட்டாலும் அதற்கு ஒரு விளைவும் ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கிறது.

நாம் நல்ல முறையில் புரிந்து கொண்ட போது கூட அதனால் நல்லதொரு விளைவு ஏற்பட்டது.

அந்த விளைவு நல்ல விளைவாகத் தான் இருந்தது.

ஆனாலும் காலப்போக்கில் நாம் அந்த விளைவை இழந்துவிட்டோம்.

ஏன் அந்த விளைவை இழந்துவிட்டோம்? ஏன் அந்தப் புரிதலைத் தவறவிட்டு விட்டோம்?

ஒரு காலத்தில் நாம் நமது மனதை நல்ல அனுபவங்களோடு வைத்துக் கொள்ளவே போராடி வந்தோம்.

அதற்காகவே சாதனைகள் பலவற்றையும் செய்து வந்தோம்.

அதன் பிறகு நாம் ஒரு தெளிவுக்கு வந்திருந்தோம். மனதைச் சீரமைக்கும் முயற்சிகள் அனைத்தையும் விட்டுவிட்டு மனதைச் சுதந்திரமாக இயங்க அனுமதித்து விட்டோம்.

அதனால் நம் மனதும் சுதந்திரமாக இயங்க ஆரம்பித்தது. அப்படிச் சுதந்திரமாக இயங்குவதையும் நம்மால் உணர முடிந்தது.

அப்படி இயங்குவது நமக்குப் பிடித்தமான ஒன்றாக இருந்ததா அல்லது பிடிக்காத ஒன்றாக இருந்ததா?

அந்த இயக்கம் நமக்குப் பிடித்த ஒன்றாகத்தான் இருந்தது.

அது நமக்குப் பிடிக்காத ஒன்றாக இருந்துவிடும் பட்சத்தில் இந்த அணுகுமுறையையே ஏற்றிருக்கமாட்டோம்.

அந்த இயக்கம் நமக்குப் பிடித்திருந்த காரணத்தாலேயே இந்த அணுகுமுறையை நாம் ஏற்றுக் கொண்டுள்ளோம்.

அதன்பிறகு என்ன பிரச்சினை ஏற்படுகிறது?

இப்போது புதிதாக இன்னுமொரு கேள்வி.

மனோலயம் மனோநாசம் (மனோலய நாசம்) என்று நாம் ஏற்கெனவே பார்த்துள்ளோம்.

மனோலயம் என்றால் என்ன, மனோலய நாசம் என்றால் என்ன?

நமக்கு ஏற்படும் மன அனுபவங்களோடு நம் மனமும் பொருந்தி நிற்பதை மனோலயம் என்று கூறுகிறோம்.

நமக்கு ஏற்படும் மகிழ்ச்சி, இன்பம், பயம், வருத்தம், கோபம் மற்றும் அனைத்து மன அனுபவங்களும் மனோலயமாகும் நிலையிலேயே நம்மால் அறியப்படுகிறது. அனுபவிக்கப்படுகிறது.

நமக்கு ஏற்பட்ட அனுபவங்கள் அனைத்தும் மறைவதையே மனோலய நாசம் எனக் குறிப்பிடுகிறோம்.

மனோலயமும், மனோநாசமும் மாறி மாறி ஏற்பட வேண்டும். அதுதான் ஆரோக்கியமான நிலை.

இப்போது நமது கேள்வி என்ன?

நம் மனது எந்த அனுபவங்களையும் பிடிக்காது. சுதந்திரமாக இயங்குவதாகவும், அது நமக்குப் பிடித்திருப்பதாகவும் பார்த்தோம்.

மனது சுதந்திரமாக இயங்கும் இந்த நிலை என்பது மனோலயமா?

அல்லது மனோலய நாசமா?

நிச்சயமாக இது மனோலய நாசந்தான்.

ஆனாலுங்கூட இந்த மனோநாசநிலை நமக்குப் பிடித்தமான ஒரு நிலையாக அமைந்திருக்கும் போது,

அதுவும் ஓர் அனுபவமாக ஆவதால் தான் அதுவும் நமக்குப் பிடித்திருக்கிறது.

நமக்குப் பிடித்தமான லயங்கள் அனைத்துமே நம்மை மயக்கும் இயல்புடையவை.

அது நம்மை மயக்கி நம்மைக் கட்டிப் போடவே முயலும்.

துன்பங்கள் எவையும் நம்மைக் கட்டுவதில்லை.

கட்டுகள் அனைத்தும் இன்பக் கட்டுகளே.

இன்பத்தின் இயற்கையே நம்மைக் கட்டிப் போடுவதுதான்.

துன்பங்கள் அனைத்திலிருந்தும் விடுபட்ட நாம்

இன்ப அனுபவம் என்னும் மயக்கும் பிடிக்குள் நம்மை யறியாமலேயே நாம் மாட்டிக் கொள்கிறோம்.

இன்பங்கள் அனைத்தும் ஞானிகளையும் மயக்கும் வல்லமை கொண்டவையாகவே உள்ளன.

மனமும் உடலும் சுறுசுறுப்பாக இருப்பது நமக்குப் பிடித்திருக்கிறது.

எதெல்லாம் நமக்குப் பிடித்திருக்கிறதோ அதெல்லாம் நமக்கு ஏற்படும் மன லயங்களில் ஓர் அழுத்தத்தை ஏற்படுத்தி விடுகிறது.

மனோ லயங்களில் ஏற்படும் அழுத்தம், மனோலய நாசத்தை தாமதப்படுத்துகிறது.

மனோ லயங்களில் ஏற்படும் அழுத்தங்கள் யாவும் நமக்குப் பிடித்தமான அனுபவங்களைத் தேடிப் போகும் போக்கினை உருவாக்குகிறது.

விளைவு?

நமது மன அனுபவங்களைச் சீரமைக்கும் பொறுப்பை நம்மையறியாமலேயே நாம் எடுத்துக் கொள்ள ஆரம்பித்து விடுகிறோம்.

மனம் சுதந்திரமாகச் செயல்படுவது தான் சரி என்று புரிந்துகொண்ட நாமே அது நல்ல அனுபவங்களோடு செயல்பட நாம் என்ன செய்ய வேண்டும் எனக் கேள்வி கேட்கத் தயாராகி விடுகிறோம்.

சுறுசுறுப்பாக இருந்தாலும் சரி, சோம்பல் வெளிப்பட்டாலும் சரி, அது இயற்கையானது எனப் புரிந்து கொள்வது தான் உண்மையைப் புரிந்து கொள்வதாகும்.

மனம் இயற்கையாகச் செயல்படும் போது அது இயற்கையாகவே தன்னைச் சீரமைத்துக் கொள்ளும்.

அதன் நல்லவிதமான செயல்பாட்டில் லயமாகி நிற்கும் மனப்போக்கும் இயற்கையாகவே ஏற்படும் என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும்.

நம்மையறியாமல் ஏற்படும் நமது தவறுகளும் இயற்கையானதே என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும்.



**V.A.S. சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

**கேள்வி : ஞானம் என்றால் என்ன? விடுதலை என்றால் என்ன? ஞானமும் விடுதலையும் ஒன்றா வேறு வேறா? அகத்தை சரிசெய்ய முயற்சி தேவை இல்லை என்று கூறுகிறீர்கள். ஞானம் அடைவது அகத்தில் தானே? அப்படி எனில் ஞானம் அடைய முயற்சி தேவை இல்லையா? முயற்சி இல்லாமல் ஞானம் அடைய முடியுமா?**

**பதில் :** இதுவரை வந்த பல ஞானிகளும் மகான்களும் யோக சக்திகளையும் ஞானத்தையும் விடுதலையையும் பிரித்து விளக்கம் அளிக்காமல் அனைத்தையும் ஒன்றாக சேர்த்தே விளக்கம் அளித்து விட்டார்கள். ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மட்டும் தான் யோக சக்திகளையும் ஞானத்தையும் விடுதலையையும் தனித்தனியாகப் பிரித்து விளக்கம் அளித்து வருகிறார்கள். யோக சக்திகள் என்பது மனதை பயிற்சி முயற்சிக்கு உட்படுத்தி பெறுவதே ஆகும். யோக சக்தி என்பது சக்தி நிலைகளின் மேம்பாடு மட்டுமே. ஆனால் ஆன்மிகத்தின் மிக உயர்ந்த நிலை விடுதலையே ஆகும். அதை இந்த யோக சக்தியால் பெற முடியாது. ஞானம் பெறுவதால் மட்டுமே விடுதலை ஏற்படும்.

ஞானம் என்றால் என்னவென்று தெரியாமலேயே நாம் இதுவரை ஞானத்தை தேடிக் கொண்டு இருந்திருக்கிறோம். உண்மையில் ஞானத்தையும் விடுதலையையும் தனித்தனியாகப் பிரித்து விளங்கிக் கொண்டால் நீங்களும் ஞானியாகவே மாறிவிடுவீர்கள்.

முதலில் ஞானம் என்றால் என்ன என்பதை விளங்கிக் கொள்வோம். மனதின் இயற்கையான இயக்கத்தை நாம் புரிந்து கொள்வதுதான் ஞானம்.

மனதின் இயற்கையான இயக்கம் என்றால் என்ன?

இதுவரை மனம் என்பது நமது கட்டுப்பாட்டில் இயங்கக் கூடிய இயக்கம் என்று நாம் எண்ணி வந்தோம். அதனாலேயே மனதை நாம் கட்டுக்குள் கொண்டு வரவே அனைத்து விதமான ஆன்மிக பயிற்சிகளையும் முயற்சிகளையும் மேற்கொண்டோம்.

அதாவது "மனம் எப்போதும் அமைதியாக இருக்க வேண்டும்" என்றும் "மனதில் எப்போதும் நல்ல எண்ணங்களே தோன்ற வேண்டும்" என்றும் தியானப் பயிற்சிகள் யோகப் பயிற்சிகள் என பல செய்து வந்தோம். ஆனாலும் மனம் நமது கட்டுப்பாட்டுக்குள் வரவே இல்லை. தியானத்தில் ஈடுபடும் வரை மனம் அமைதியாக இருக்கும். பிறகு யதார்த்த வாழ்க்கையை சந்திக்கும் போது அனைத்து பிரச்சினைகளும் வழக்கம்போல் ஏற்பட்டுவிடும். நமக்கு எந்த ஒரு நிரந்தரத் தீர்வும் ஏற்படவில்லை. இதனாலேயே "ஞானம் பெறுவதற்கு நமது தவ முயற்சிகள் போதவில்லை . இன்னும் ஆழமாக தியானம் மேற்கொள்ள வேண்டும்" என்ற முடிவுக்கு நாம் வந்து விடுகிறோம்.

மனதின் இயக்கம் என்பது இயற்கையின் இயக்கத்தை போன்றது.



மனதின் இயக்கம் என்பது தாமாகவே தன்னைத்தானே தூய்மை செய்து கொண்டு ஓடிக்கொண்டிருக்கும் ஆற்றை போன்றது. ஆற்றில் எவ்வளவு மோசமான சகதிகள் கலந்தாலும் ஆறு தான்

ஓடுகின்ற ஓட்டத்தில் தன்னைத்தானே தூய்மையாக்கிக் கொண்டு புனித ஆறாக மாறி ஓடிக் கொண்டிருக்கிறது.

இதைப்போல் நம்முள் சதா நிகழ்ந்து கொண்டிருக்கும் மன இயக்கமும் தாமாக நடைபெறுகின்ற இயக்கம் என்பதை புரிந்து கொள்வதே ஞானம்.



மனதின் இயக்கத்தினை எளிமையாக விளங்கிக் கொள்ள ஓர் உதாரணத்தை பார்ப்போம்.

நாம் பிறந்தது முதல் இறக்கும் வரை சுவாசித்துக் கொண்டிருக்கிறோம். சுவாசித்தல் என்பது தாமாக நடைபெறுகின்ற இயக்கம். சுவாசித்தல் நமது செயல் அல்ல. இந்த சுவாசித்தல் என்ற இயக்கம் நாம் விழித்திருக்கும்போது, தூங்கும்போது, நமக்குத் தெரியும் போது, தெரியாதபோது, நாம் எந்த வேலை செய்து கொண்டிருந்த போதிலும் எந்த வேலையும் செய்யாமல் இருந்த போதிலும் என எப்பொழுதும் நம்முள் தொடர்ந்து தடையில்லாமல் சுவாச இயக்கம் தாமாக இயங்கிக் கொண்டிருக்கக் கூடிய ஓர் இயக்கம். இதில் நம் முயற்சி என்பது அணுவளவும் இல்லை. நம்முள் சதா நடைபெற்றுக் கொண்டிருக்கின்ற சுவாச இயக்கம் சம்பந்தமாக நாம் எதுவுமே செய்யத் தேவையில்லை. எதுவும் செய்யவும் முடியாது என்பதை புரிந்து கொள்வதோடு நமது வேலை முடிந்துவிடுகிறது.

நமது ஐந்து புலன்களும் எப்படி சுதந்திரமாக செயல்படுகிறது என்பதை பார்ப்போம்.

நமது கண்கள் எப்போதும் சுதந்திரமாக அடுத்தடுத்த காட்சிகளை மாற்றி பார்த்துக் கொண்டே தான் இருக்கிறது. எந்த ஒரு காட்சியிலும் தொடர்ந்து நிலைத்து இருப்பது இல்லை. நமது காதுகளில் தொடர்ந்து எந்த ஒரு சப்தமும் நீடிப்பது இல்லை. நமது நாக்கில் எந்த ஒரு சுவையும் தொடர்ந்து மாறாமல் இருப்பதில்லை. நமது உடலின் வெப்ப நிலை கூட எப்பொழுதும் ஒரே மாதிரி இருப்பது இல்லை. நமக்குள் சுற்றிக் கொண்டிருக்கும் காற்று கூட வினாடிக்கு வினாடி மாறுபடுகிறது. இந்த ஐந்து புலன்களும் பொங்கி பிரவாகித்து ஓடும் அருவியின் இயக்கத்தை போன்றே எதிலும் நிலைபெறாமல் ஓடிக்கொண்டே இருக்கிறது.

5 புலன்களை தொடர்ந்து ஆறாவது புலனான மனதிலும் எந்த ஓர் எண்ணமும் உணர்வும் தொடர்ந்து நிலைத்து இருப்பது இல்லை. சுதந்திரமான மன இயக்கத்தில் அறிவு குறுக்கிடுவதால் மட்டுமே எண்ணமும் உணர்வும் தொடர்ந்து நீடிக்கிறது.

இப்படி புரிந்து கொள்ளும் போது மனதினை நம் கட்டுக்குள் கொண்டு வருவதற்காக பயிற்சி என்ற முறையில் மனதிற்கு கொடுத்துக் கொண்டிருந்த டார்ச்சரில் இருந்து விடுபடுகிறோம்.

இப்படி விடுபடும்போது அக சரணாகதி ஏற்படுகிறது.

விடுதலை என்றால் என்ன என்பதை புரிந்து கொள்ள இதே உதாரணத்தை வேறு ஒரு கோணத்தில் பார்ப்போம்.

நமது சுவாச இயக்கம் நமது செயல் அல்ல என்பதைப் புரிந்து கொண்டோம். அப்படி புரிந்து கொண்டதால் தாமாக இயங்கும் சுவாச இயக்கத்தோடு நாம் முரண்படுவது இல்லை. அதாவது நமது புற செயலுக்கு தக்கவாறு நமது சுவாசம் வேகமாகவோ அல்லது மெதுவாகவோ இயங்கும். நமது உடலின் பிராணவாயு தேவைக்கேற்ப இது தாமாகவே இயங்கிக் கொண்டிருக்கும் இயக்கம்.

இதுபோலவே மனதில் தாமாக தோன்றும் உணர்வுகளும் எண்ணங்களும் நம் அறிவுக்கு கட்டுப்பட்டவை அல்ல என்று புரிந்து கொள்ளும்போது அவற்றை கட்டுப்படுத்தும் முயற்சியில் இருந்து அறிவு விடுபட்டு தாமாக இயங்குகின்ற மன இயக்கத்தோடு அகசரணாகதி அடைந்த விடுகிறது. அகசரணாகதி ஏற்பட்ட நிலையில் நமக்கு ஏற்படும் புற சூழ்நிலைக்கு ஏற்ப நமது எண்ண உணர்வுகள் தாமாக தோன்றி பிரவாகமாக ஓடி மறைகின்றன. இதுவே அக விடுதலை.

நாம் நம் மன இயக்கத்திற்கு விடுதலை வழங்குவதன் மூலம் நாமும் நம் மன இயக்கத்திலிருந்து விடுதலை பெறுகிறோம்.

மனம் என்பது இயற்கையான இயக்கம் என்று புரிந்து கொள்ளும் வரை நமது அறிவுக்கு அவசியம் முயற்சி தேவை. அதாவது ஞானம் பெறுவதற்கு முயற்சி தேவை.

புரிதலுக்குப் பின் அறிவு அக சரணாகதி அடைந்த உடன் விடுதலை இயக்கம் தாமாக நடைபெறுகிறது.

**"ஞானத்திற்கு முயற்சி அவசியம், விடுதலைக்கு அந்த முயற்சியே தடை."**

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களால் ஞானத் தெளிவு பெற்ற நம் அனைவருக்கும் அகத்தளவில் வேலை நிறைவுற்றது.

நமது பணிகள் அனைத்தும் இனி புறத்தே மட்டுமே.

அவரவர்களுக்கு தனிப்பட்ட பல கடமைகள் புறத்தே இருந்தாலும் நமக்கு விடுதலையை கொடுத்த ஞான புரிதலை உலகம் முழுவதும் கொண்டு சேர்ப்பது நம் அனைவரின் தலையாய கடமையாகும்.

காலங்காலமாக ஞானத்தையும் விடுதலையையும் பெற ஆன்மிகத்தில் தேடுதல் உள்ள பலர் கடும் பாடுபட்டு வருகிறார்கள். உலகியலில் இருப்பவர்களும் ஏதோ ஒரு வகையில் மனத் துயரத்திற்கு ஆளாகி அதனோடு போராடி வாழ்க்கை முழுவதும் துயரத்திலும் துன்பத்திலும் சிக்கித் தவித்து வருகிறார்கள்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் தனது 40 ஆண்டுகால தேடுதலில் கிடைத்த ஞானத்தை நம் அனைவருக்கும் மிக எளிதாக்கி வழங்கியிருக்கிறார்கள்.

மேலும் தன்னை உலகினுக்கே அர்ப்பணித்து தொடர்ந்து தொண்டாற்றி வருகிறார்கள். ஆதலால் ஐயாவால் தெளிவு பெற்ற நாமும் இந்த மெய்ஞானத்தை உலகிற்கு எடுத்துச் செல்வதை நமது தலையாய கடமையாக கொள்ள வேண்டும்.

மேலும் சேலத்தில் அமைந்துள்ள நமது ஸ்ரீ பகவத் பவன் பற்றி நாம் அனைவரும் அறிந்ததே.

ஒவ்வொரு மாதமும் இங்கு ஞான முகாம் நடைபெற்று வருவதும் நாம் அனைவரும் அறிந்ததே.

சேலத்தை போன்றே சென்னையிலும் ஒரு பகவத் பவனை உருவாக்குவது அனைவருக்கும் பயனளிக்கும் என்ற அடிப்படையில் அய்யாவின் ஆலோசனைப்படி அதனை உருவாக்கும் முயற்சியில் செயல்பட்டு வருகிறோம்.

அதன் முதற்கட்டமாக 21.4.2019 அன்று சென்னை பகவத் பவன் கட்டட பணிக்கான பூமி பூஜை மிகச் சிறப்பாக நடைபெற்றது. பூமி பூஜைக்கு பிறகு ஸ்ரீ பகவத் அய்யா அவர்கள் சென்னை பகவத் பவனின் தேவை பற்றி சிறப்புரையாற்றினார்கள்.

நாம் சென்னையில் ஒரு பகவத் பவனை உருவாக்க வேண்டும் என்ற தேவையை அறிவித்த உடனே தங்களது நிலத்தை பயன்படுத்திக் கொள்ளுமாறு **திரு. சம்பந்தம் ஐயா – திருமதி. வடிவம்மாள்** தம்பதியினர் வழங்கியுள்ளார்கள்.

அவர்களுக்கு நம் அனைவரின் சார்பாகவும் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறோம்.

ஸ்ரீ பகவத் பவன் கட்டடத்திற்கு ஆகும் செலவுகளை பகிர்ந்து கொள்ள ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் பலரும் தாங்களாகவே முன்வந்து நன்கொடைகளை வழங்கியுள்ளார்கள்.

இது மனதிற்கு மிகவும் நெகிழ்ச்சியாக உள்ளது.

அவர்கள் அனைவருக்கும் உளமார்ந்த நன்றிகளை தெரிவித்துக் கொள்கிறோம்.

வாய்ப்புள்ளவர்கள் தங்களது பங்களிப்பை வழங்கி உதவி செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

மேலும் மே ஒன்றாம் தேதி முதல் ஐந்தாம் தேதி வரை சேலம் ஏற்காட்டில் சிறப்பு ஞான முகாம் நடைபெற்றது. இதில் பல புதிய அன்பர்கள் கலந்துகொண்டு ஞானத்தெளிவு பெற்றனர். இந்த ஞான முகாமில் ஞானம் பெற்றவர்கள் படிக்கவேண்டிய நூலான **ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்** எனும் நூலின் இரண்டாம் பதிப்பினை வெளியிட்டுள்ளோம்.

தேவையானவர்கள் வாங்கி பயன் பெறுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

மேலும் இந்த மாத இதழில் ஜுன் ஜுலை மற்றும் ஆகஸ்ட் மாதங்களில் நடைபெறும் ஞான முகாம் பற்றிய விபரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஞான தேடல் உள்ளவர்களுக்கு தெரியப்படுத்தி அவர்களையும் கலந்து கொள்ள செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

அனைவருக்கும் ஞானத்தை பகிர்வோம்!

துன்பத்தையும் துயரத்தையும் துடைத்தெறிவோம்!!

# நிகழ்ச்சி நிழல்கள்



ஐயாவுடன் நமது அன்பர் திருப்பூர் கோபிநாத் குடும்பத்தினர்



சகோதரி குடும்பத்தினருடன் ஸ்ரீ பகவத் ஐயா



ஏற்காடு ஞான முகாம்











ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள் நூல் இரண்டாம் பதிப்பு வெளியீட்டின் போது





ஏற்காடு ஞான முகாமில் கலந்து கொண்டவர்கள்

# சென்னை ஸ்ரீ பகவத் பவன்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினராகிய தங்களுக்கு வணக்கம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் பிரதி மாதம் 1ஆம் தேதி முதல் 15ஆம் தேதி வரையில் சேலத்திலும் பிறகு 16 ஆம் தேதியில் இருந்து 31 ஆம் தேதி வரை சென்னையிலும் தங்க முடிவு செய்திருக்கிறார்கள்.

அதற்காக சென்னையிலும் சேலத்தை போன்று ஸ்ரீ பகவத் பவன் ஒன்றை உருவாக்கலாம் என்று ஐயாவின் ஆலோசனை படி திட்டமிட்டுள்ளோம்.

இது நமது பகவத் ஐயாவுக்கான இல்லமாகவும் நாம் அனைவரும் ஐயாவை சந்தித்து தங்கி உரையாடி செல்வதற்கு ஏற்ற வகையில் நமக்கான இல்லமாகவும் அமையவிருக்கிறது.

மேலும் உலகத்தில் ஞான தேடுதல் உள்ள எவர் வேண்டுமானாலும் வந்து செல்வதற்கு வசதியான இடமாகவும் இவ்விடம் அமையும்.

மேலும் சென்னை ஸ்ரீ பகவத் பவன் உருவாக்குவது சம்பந்தமாக கலந்தாலோசனைக் கூட்டம் ஒன்று சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் மையத்தில் ஏப்ரல் 7 ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை அன்று நடைபெற்றது.

ஆலோசனைக் கூட்டத்தில் பின்வருமாறு முடிவுகள் எடுக்கப்பட்டன.

ஸ்ரீ பகவத் பவன் இல்லத்திற்காக தனது இடத்தை பயன்படுத்திக் கொள்ளுமாறு நமது குடும்ப உறுப்பினர் செயல்வீரர் சென்னை திரு. **சம்பந்தம் ஐயா** – திருமதி **வடிவம்மாள்** தம்பதியினர் வழங்கியுள்ளார்கள்.

இவர்களுக்கு நம் அனைவரின் சார்பாக உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

நமது சென்னை பகவத் பவன் கட்டடப் பணிக்காக ஆகும் செலவுகளை நமது குடும்ப உறுப்பினர்களின் பங்களிப்பை கொண்டு நிறைவு செய்யலாம் என எண்ணியுள்ளோம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் இல்லத்தில் பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவரின் பங்களிப்பும் இருக்க வேண்டும் என்பதே முக்கியம். பங்களிப்பு தொகை எவ்வளவு என்பது முக்கியமல்ல. பங்களிக்கும் உள்ளமே முக்கியம். எனவே தங்களால் இயன்றதை வழங்கும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம். உள்ளன்போடு தாங்கள் அளிக்கும் பங்களிப்பை மனமுவந்து பெற்றுக்கொள்கிறோம்.

மேலும் நமது பவன் கட்டும் பணிக்காக இருபத்தையாயிரமும் அதற்கு மேலும் வழங்குபவர்களை சென்னை ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனர்களாக இணைத்துக் கொள்ளலாம் என்றும் திட்டமிட்டுள்ளோம்.

நமது இல்லத்திற்கான பூமி பூஜை 21.4.2019 ஞாயிற்றுக்கிழமை அன்று சிறப்பாக நடைபெற்றது.

இடம் : **ஸ்ரீ பகவத் பவன் இல்லம்,**
இந்திரா நகர் அருகில், மணப்பாக்கம்,
சென்னை. தமிழ்நாடு.

**வாருங்கள் ஒன்றிணைவோம்.**
**நம் அனைவரின் ஒருங்கிணைந்த கூட்டு முயற்சியால் நமக்கான இல்லத்தை உருவாக்குவோம்.**

**ஸ்ரீ பகவத் மிஷன்**
**Route Map : https://goo.gl/maps/ZsYtnbe4F6s**

மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்

திரு. **ரவிச்சந்திரன்**, சென்னை - **94444 02986**
திரு. **தியாகராஜன்**, சென்னை - **93810 19473**
திரு. **சம்பந்தம் ஐயா**, சென்னை - **90030 76150**
திரு. **சரவணன்**, சென்னை - **97908 99666**
திரு. **சரவணன்**, சேலம் **99942 05880**
திரு. **ஜீவமணி**, சேலம் **97891 65555**







ஓர் இளைஞன் இயல்பிலேயே புத்திக்கூர்மையுடன் இருந்து வந்தான். தனது புத்தி கூர்மையால் பல நுணுக்கமான விஷயங்களைக்கூட மிக எளிதாக கற்றுக்கொண்டு அதை செயல்படுத்துவதில் வல்லவனாக இருந்தான்.

இவ்வளவு திறமையும் புத்திகூர்மையும் அறிவு இருந்தும் அவனுக்கு ஏற்பட்ட ஒரு மனப் பிரச்சினையால் மிகவும் பாதிப்படைந்தான். அந்தப் பிரச்சினை பற்றிய தேவையற்ற எண்ணங்களால் மிகவும் தொந்தரவுக்கு ஆளானான்.

இதனால் இவனது புற வேலைகள் பாதித்தன. வெளி வேலைகளில் கவனம் செலுத்த முடியாமல் தவித்தான்.

'எவ்வளவு புத்தி கூர்மையும் திறமையும் தனக்கு இருந்தும் கூட தனது மனப் பிரச்சினைக்கு தீர்வு காண முடியவில்லையே' என்று அவன் மிகவும் வருந்தினான்.

'தன் புத்தி கூர்மையால் தனது மனதை எப்படியும் சரி படுத்தி விடலாம் எண்ண ஓட்டத்தை சீர் படுத்தி விடலாம்' என்று பெரிதும் முயற்சி செய்து வந்தான்.

தியானங்கள், யோகப் பயிற்சிகள், மூச்சுப் பயிற்சிகள் என மன கவலையிலிருந்து விடுபடுவதற்கும் மன விடுதலை பெறுவதற்காகவும் தனது புத்தி கூர்மையால் பெரிதும் முயன்று பார்த்தான் இளைஞன்.

ஆனால் தோல்வியையே தழுவி மிகவும் சோர்வுற்றான்.

ஒரு ஜென் குருவை சந்தித்து தன் நிலையை விளக்கி தனக்கு தீர்வு கேட்டான் இளைஞன்.

குரு இளைஞனிடம் "நீ ஓர் ஏழு நாட்கள் இங்கேயே தங்கி சமையலறையில் வேலை செய்ய வேண்டும். அப்போது தான் உனக்கு என்னால் தீர்வு வழங்க முடியும்" என்றார்.

இளைஞன் திகைத்தான் "என் எண்ண ஓட்டத்தை ஒழுங்குபடுத்துவதற்கான தீர்வுக்கும் உங்கள் சமையலறையில் நான் வேலை செய்வதற்கும் என்ன சம்பந்தம் உள்ளது? புரியவில்லையே சுவாமி" என்றான்.

குரு அவனிடம், "இப்போது என்னிடம் எதுவும் கேட்காதே. நான் சொல்லுகின்ற வேலையை மட்டும் செய். அதுவே போதும். போகப்போக எல்லாமே புரியும்" என்றார்.

"நான் என்ன செய்ய வேண்டும் சுவாமி" என்றான் இளைஞன்.

"உனக்கு ஒரு கூர்மையான கத்தி கொடுக்கப்படும். சமையலறையில் நான் சொல்லுகின்ற காய்கறிகளையும் பழங்களையும் பொருட்களையும் நறுக்க வேண்டும் அதுதான் உன் வேலை" என்றார் குரு.

வேறு வழியில்லாமல் அந்த வேலையை செய்ய ஒப்புக் கொண்டான் இளைஞன்.

இருப்பினும் 'எவ்வளவோ புத்திகூர்மையுள்ள தனக்கு இந்த அற்ப வேலையை கொடுத்து விட்டாரே! இவர் உண்மையிலேயே தனக்கு தீர்வு வழங்குவாரா?!' என்ற மனதில் எண்ணிக் கொண்டான்.

அவனுக்கு மிகக் கூர்மையான கத்தி கொடுக்கப்பட்டது. தினமும் ஒவ்வொரு விதமான காய்கறிகள் வழங்கப்பட்டன.

அவன் திறமையைக் கொண்டு நேர்த்தியாகவும் அழகாகவும் காய்கறிகளை வெட்ட வேண்டும். இதுதான் அவனுக்கு கொடுக்கப்பட்ட வேலை.

குரு அவனுக்கு நான்கு நாட்கள் காய்கறிகளை வெட்டுமாறு கொடுத்தார். கொடுக்கப்பட்ட கூர்மையான கத்தியைக் கொண்டு மிக அழகாகவும் நேர்த்தியாகவும் வெட்டி குருவின் பாராட்டை பெற்றான்.

அடுத்த இரண்டு நாட்கள் பழங்களை நறுக்கக் கொடுத்தார் குரு. அதே கூர்மையான கத்தியால் அவன் பழங்களை அழகாகவும் விதவிதமாகவும் நறுக்கி மீண்டும் குருவின் பாராட்டை பெற்றான்.

ஏழாம் நாள் வந்தது. இளைஞன் 'தன்னை இன்று குரு எதை வெட்டச்சொல்லப் போகிறாரோ' என்று ஆவலுடன் காத்திருந்தான்.

குரு இளைஞனிடம், "இன்றோடு உன்வேலை முடிகிறது. எனவே உனக்கு கொடுக்கப்பட்டுள்ள கூர்மையான கத்தியை வெட்டிவிடு" என்றார்.

"சுவாமி எனக்குப் புரியவில்லையே! எப்படி கத்தியை வெட்டுவது?" என்றான் இளைஞன்.

குரு, "உன்னிடம் உள்ள கூர்மையான கத்தியை கொண்டே கத்தியை வெட்டு" என்றார்.

"சுவாமி நீங்கள் கூறுவது அபத்தமாக இருக்கிறது. கத்தியைக் கொண்டு காய்கறிகளை வெட்டலாம். பழங்களை வெட்டலாம். வேறு எதை வேண்டுமானாலும் வெட்டலாம். எப்படி கத்தியைக் கொண்டே கத்தியை வெட்ட முடியும்" என்று கேட்டான் இளைஞன்.

"நீ உன் மனதின் ஒரு பகுதியான புத்தியை கொண்டே ஒட்டுமொத்த மனதையே ஒழுங்குபடுத்தி விடலாம் என்று எண்ணும் போது, ஏன் கத்தியைக் கொண்டே கத்தியை வெட்ட முடியாது?" என்றார் குரு.

இளைஞனுக்கு பளீரென்று புரிந்தது.

"சுவாமி என் புத்தி கூர்மையின் இயலாமையை புரிந்து கொண்டேன். பிறகு எப்படித்தான் என் எண்ணங்களை ஒழுங்குபடுத்துவது?" என்றான் இளைஞன்.

**குரு, "புத்தியின் வேலை புறத்தில் வேலை செய்வதற்குத்தான். உன் அகத்தை சரி செய்வதற்கு அல்ல. அது ஒரு போதும் முடியாத காரியமும் கூட. எப்போது உன் அக இயலாமையை புரிந்துகொண்டு உன் முயற்சிகள் அனைத்தையும் கை விடுகிறாயோ, அப்போதே உன் அகம் சுதந்திரம் அடைந்து விடும். அனைத்து எண்ணங்களும் உணர்வுகளும் தாமாக தோன்றியது போல் தாமாகவே மறைந்து விடும்" என்றார்.**

குருவின் விளக்கம் இளைஞனின் புத்தியில் மின்னல் வெட்டியது போல் இறங்கியது. அவன் கேள்வியற்று மௌனமாகி போனான்.

அக விடுதலை அடைந்து நன்றியுடன் குருவின் பாதம் சரணடைந்தான்.

அகத்தில் விடுதலையோடு புறத்தில் வழக்கத்தை விடவும் திறம்பட செயல்பட்டான் இளைஞன்.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 | Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of publication : First Week of Every Month | Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555